# காயத்ரி தினசரி வழிபாடு

(மஹாமந்திரமும் பூஜை முறைகளும்)

**Gayatri ki Dainik Sadhana**

(Contains : Mahamantra and Daily Prayers)



பண்டித ஸ்ரீராம் சர்மா ஆச்சார்யா

# காயத்ரி தினசரி வழிபாடு

(மஹாமந்திரமும் பூஜை முறைகளும்)

## GAYATRI KI DAINIK SADHANA

**(Contains : Mahamantra and Daily Prayers)**

*நூ நீஉளனூ!*

**பண்டித ஸ்ரீராம்சர்மா ஆசார்யா**

வெளியிட்டோர்

**Sri Vedmata Gayatri Trust (TMD)**

Shrirampuram, Gayatri Nagar, Shantikunj,
Haridwar - 249411, Uttarakhand

First Edition : 2016 Price : Rs. 6.00

**Book Name :**
**Gayathri Dinasari Valipadu**

**Book Code** : TM111
**First Edition** : 2016
Price : Rs. 6.00

**Publisher :**
**Sri Vedmata Gayatri Trust (TMD)**
Shrirampuram, Gayatri Nagar, Shantikunj,
Haridwar - 249411, Uttarakhand
Phone :01334 -260602,260403,261328,Fax :260866
E-mail : shantikunj@awgp.org, south@awgp.in
Web : www.awgp.org. www.dsvv.org

**Zonal Centre :**
**Gayatri Chetana Kendra**
"Ganga Bhåwan", # 21, Samudra Mudali Street,
Park Town, Chennai - 600 003.
Phone : 044 - 25331639
E-mail : gckchennai@awgp.in

**Tamil Nadu Centres :**
Madurai : 097894 02824
Coimbatore : 0422-3209941, 09360364592
Tiruppur : 093610 13469

# முகவுரை

இந்த புத்தகத்தில் விளக்கப்பட்டுள்ள காயத்ரி சாதனை எல்லா ஜாதியினரும் ஆண்களும் பெண்களுமாக செய்யலாம். இதை பிராமணர்கள்தான் செய்யத் தகுதி உள்ளவர்கள், மற்றும் பெண்கள் செய்யக் கூடாது என்பது தவறான கருத்து. அக்காலத்தில் ஆண்களும், பெண்களும், எல்லா ஜாதியினரும் செய்து வந்தார்கள், ஏன்? இந்தச் சக்தி வாய்ந்த மந்திரத்தை உலகிற்கு அறிமுகப்படுத்திய மகரிஷி விஸ்வாமித்திரரே பிராம்மண ஜாதியில் பிறந்தவர் அல்லவே!

காயத்ரி சக்தி எங்கும் நிறைந்த பரமாத்மாவின் சத்திய ஒளியின் தத்துவம், ஆகையால் ரூபத்தில் நம்பிக்கை இல்லாத மக்கள் எங்கும் நிறைந்த பேருண்மையின் ஒளியாக மனதில் தியானித்து இச்சாதனையைச் செய்யலாம். காயத்ரி சக்தியை அன்னை ரூபத்தில் வழிபட விரும்புகிறவர்கள், படத்தின் உதவியுடனோ அல்லது மனதில் ரூபத்தை தியானித்தோ இச்சாதனையைச் செய்யலாம்.

மற்ற மதத்தினரும் இப்பேருண்மை மீது நம்பிக்கை வைத்து இச்சாதனையைச் செய்தால் பலன் நிச்சயம். எல்லா மதமும் ஒரே உண்மையில் தான் முடிகிறது.

இந்த சாதனையை பூஜை, உபாசனை என்று குறிப்பிட்டாலும் செய்வதற்கு ஒரு சுத்தமான இடம், உட்கார ஒரு விரிப்பு, சிறிது நீர், ஒரு ஜபமாலை மற்றும் ஒரு ஊதுவத்தியே போதுமானது. படம் வைப்பது அவரவர் விருப்பம், தொடர்ந்து ஒரு வாரம் செய்தால், மந்திரங்கள் மனதில் பதிந்து, முழுச்சாதனை புரிய அரை மணி நேரமே ஆகும். நாம் நம்முடைய நலத்திற்கு அரை மணி நேரம் தினமும் ஒதுக்குவது கடினமா?

புத்தகத்தில் விளக்கியுள்ள பாவனையுடன் மந்திரத்தை ஜபித்தால் வாழ்க்கையில் நேர்மையானவர்கள் சில நாட்களிலேயே பலன் காணலாம். உள்ளத்தில் தெம்பும் உற்சாகமும் பெருகும். மனோதிடம் அதிகரிக்கும். மாணவ மாணவிகள் புத்தியும் ஞாபகசக்தியும் அதிகரித்து வாழ்க்கையில் வெற்றி பெறுவார்கள். ஆனால் உள்ளத்தில் நேர்மை இல்லாதவர்கள், நல்வழியில் நடக்க விரும்புகிறவர்கள், இதைத் தொடர்ந்து செய்து வந்தால் அவர்களும் வெற்றி பெறுவார்கள். ஆனால் முதல் சில நாட்களின் சக்தி, உள்ளத்தை தூய்மையாக்குவதற்கு செலவழியும். வாழ்க்கையில் ஒன்றையும் இலவசமாகப் பெற முடியாது.

இதனால் சாதகன், சுற்றியுள்ளோர் மற்றும் நாடும் நலம் பெறுகிறது.

# காயத்ரி மந்திரம்

**ஓம் பூர் புவஹ ஸ்வஹ தத்ஸவிதுர்வரேண்யம், பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ நஹ ப்ரசோதயாத்**

**பொருள்:**

நம்முடைய உயிராற்றலாகவும், துக்கத்தை அழிப்பதாகவும், இன்பமே வடிவாகவும் உள்ள அந்த சூரியனைப் போன்ற ஒளிமயமானதும், தனக்கு மேலாக வேறு ஒன்றும் இலாததும், நம் பாவங்களை அழிக்கக் கூடியதுமான தெய்வீக பரம்பொருளை நாம் நம்முடைய மனதில் இருத்தி தியானிப்போமாக! அந்த பரம்பொருள் நமது அறிவை நல்வழியில் ஈடுபடுத்தட்டும்.

* இருபத்தி நான்கு எழுத்துக்களாலான இந்த மந்திரத்தின் சொற்களின் கோர்வை விஞ்ஞான ரீதியாக தொடுக்கப்பட்டது. இந்த ஜபத்தால் சாதகனின் உள் உறங்கி இருக்கும் கேந்திரங்கள் விழித்துக் கொள்கின்றன. இதனால் சக்தியின் மூலக் கருவறையின் வாயில்கள் திறக்கப் படுகின்றன.
* இந்த மந்திரத்தில் மூன்று மூலமும், மூன்று அடிகளும் இருக்கின்றன. முதல் அடி பரமாத்மா எங்கும் நிறைந்துள்ளார் என்ற உண்மையைப் பரிந்துரைக்கிறது.
* எந்த திவ்ய குணங்களை தியானிக்கிறோமோ, அவை நம்முள் அவதரிக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்யப் படுகிறது இரண்டாவது அடியில்.
* நமது புத்திக்கு சந்மார்க்கத்தைக் காண்பிக்க வேண்டி இந்த திவ்ய குணங்களின் சக்தியை

தியானிக்கிறோம் என்ற உண்மை மூன்றாவது அடியில் விளக்கப்பட்டுள்ளது.

**ஜபம் :** உன்னதமான குறிக்கோளை வேண்டி குறிப்பிட்ட மந்திரத்தை மீண்டும் மீண்டும் உச்சரித்தல்.

**தவம் :** உன்னதமான குறிக்கோளை அடைவதற்காக உடலை வருத்திக் கொள்ளுதல்

**யாகம் :** உன்னதமான பொருள்களை உலக நன்மையைக் கருதி உபயோகித்தல்.

## காயத்ரி உபாசனை

காயத்ரி உபாசனை எல்லோரும் செய்ய வேண்டிய ஒரு அவசிய கடமை. எல்லாவிதமான பூஜைகளில் சிறந்த பூஜை காயத்ரி பூஜை. இதை ஆண்-பெண் இருபாலரும். எல்லா ஜாதியினராலும் செய்யக் கூடிய பூஜை. இதன் குறிக்கோள், நமது புத்தியை சாத்வீக வழியில் செலுத்துவது; சத்திய வழியில் நடப்பது. இதனால் நம் ஆத்ம சக்தி பெருகும். நாம் நினைக்கும் காரியங்கள் கைகூடும்.

இதை பெண்கள் செய்தால் அதிக பலன் கிட்டும். உண்மையிலே அன்னைக்கு பெண்கள் மீது என்றுமே அதிக கருணை உண்டே!

விதி பூர்வமாக செய்யும் சாதனைதான் முழுப் பலனைத் தரும். அரைகுறையாகச் செய்தால் பலனும் கிடையாது. நம்பிக்கையும் பிறக்காது. மருத்துவர் கூறிய படி முழு மருந்தையும் குடித்தபின் தானே வியாதி பூர்ண குணமாகும்!

சரீரத்தை சுத்தம் செய்த பிறகுதான் சாதனையை ஆரம்பிக்க வேண்டும். குளித்தபின் செய்வது மிகவும் நன்று. உடல் அசௌகரியம் இருந்தால், கை கால்களை

நீரில் அலம்பி, முகம் துடைத்து உட்காரலாம்.

உட்கார வேண்டிய இடம் சுத்தமாக காற்றோட்டமாக இருப்பது நல்லது. உடலில் தூய்மையான துணிகள் உடுத்தியிருக்க வேண்டும். சுகாசனத்தில் அமருவது அவசியம். கடினமான ஆசனத்தில் உட்கார்ந்து உடல் அவதிப்பட வேண்டாம். மனம் தன் நோக்கத்தை விட்டு, உடல் மீது செல்லும் பாய், பலகை, அருகம்புல் ஆசனமோ அல்லது தூய விரிப்போ அவசியம்.

ஜபமாலை ஒன்று அவசியம். இது துளசி அல்லது சந்தன மாலையாக இருக்கலாம். சாதனை காலை நான்கு மணி முதல் மாலை ஏழரை மணி வரை. எப்பொழுது சௌகரியமோ அப்போதும் செய்யலாம். காலை எட்டு மணி வரை மற்றும் மாலை நேரத்தில் செய்வது மிக உத்தமம். மற்றபடி இரவு நேரம் மானசீகமாக ஜபம் செய்வதில் தப்பில்லை. காலையில் கிழக்கை நோக்கியும், மாலையில் மேற்கு நோக்கியும் அமருவது உத்தமம். வீட்டில் படம் இருந்தால், படத்தை நோக்கியும் அமரலாம்.

நடுவில், அவசிய காரணங்களுக்காக எழ வேண்டிய நிலை ஏற்பட்டால், மறுபடி கைகால் கழுவி தொடரலாம். ஜபத்தை சத்தமாக செய்யக் கூடாது. இவை நாம் மற்றவர்களுக்காக செய்வதில்லை. மானசீகமாக ஜபிப்பது உத்தமம். இல்லையேல் மெல்லிய குரலிலும் ஜபிக்கலாம்.

## சாதனை செய்யும் முறை

இதில் முறைப்படி நான்கு பகுதிகள் உள்ளன.

1) பிரம்ம சந்தியா
2) பூஜை
3) ஜபம்
4) பிரார்த்தனை

**பிரம்ம சந்தியா :**

ஆசனத்தில் அமர்ந்து, உடலையும், மனதையும் தூய்மையாக்கிட, உடலின் பஞ்ச மகா பூதங்களின் சுத்தியை பிரம்ம சந்தியா என்று கூறுகிறோம். இவை வரிசைக் கிரமமாக:

1. **பவித்ரீகரணம்:** இடது கையில் சிறிது நீர் வைத்து, வலது கையால் மூடிக் கொண்டு காயத்ரி மந்திரம் சொல்லிக் கொண்டே தலை மற்றும் உடல் மீது நீரைத் தெளிக்க வேண்டும். உடலில் இருக்கும் அசுத்தம் நீங்கி உடல் தூய்மையாவதாக பாவிக்க வேண்டும்.
2. **ஆசமனம்:** வலது கையில் சிறிது நீர் எடுத்துக் கொண்டு காயத்ரி மந்திரம் ஒரு தடவை ஜபித்து அந்த நீரை அருந்த வேண்டும். இதை மூன்று முறை செய்ய வேண்டும். இவை முறையே சொல், மனம் மற்றும் செயல் தூய்மையைக் குறிக்கிறது.
3. **சிகை கட்டுவது:** குடுமி வைத்திருப்பவர்கள் காயத்ரி ஜபம் செய்து கொண்டே அரை முடிச்சு போட வேண்டும். மற்ற எல்லோரும், பின் தலை உச்சி நடுவில் வலது கையின் ஐந்து விரல்களைக் குவித்து வைத்து ஒரு தரம் காயத்ரி மந்திரம் கூற வேண்டும். இதனால் மேரு தண்டம் சுத்தமாகிறது.
4. **பிராணாயாமம்:** யோக சாஸ்திரத்தில் பல வகைகள் விளக்கப்பட்டுள்ளன. இங்கு எல்லோரும் செய்யக் கூடிய எளிய முறை விளக்கப்பட்டுள்ளது.

வாயை மூடிக் கொள்ளவும். மனதை மூச்சின் மீது செலுத்தவும். கண்களை மூடிக் கொள்ளவும்.

**"ஓம் பூர்புவஹ ஸ்வஹ"** என்று மனதிற்குள் கூறிக் கொண்டே நாசிகளினால் சுவாசத்தை உள்ளே நிரப்பவும். எங்கும் வியாபித்திருக்கும் பிராண சக்தி நம்முள் புகுவதான எண்ணம் மனதில் வேண்டும்.

**"தத்ஸவிதுர்வரேண்யம்"** என்று ஜபித்துக் கொண்டே சுவாசத்தை உள்ளே நிறுத்தவும். சூரிய ஒளி நிறைந்த இந்த பிராணசக்தி உடல் முழுவதும் பரவுவது போல் எண்ண வேண்டும்.

**"பர்கோ தேவஸ்ய தீமஹி"** என்று சொல்லியவாறு வாயுவை நாசிகளினால் மிக நிதானமாக வெளியேற்றவும். நம்மை விட்டு வேண்டாத எண்ணங்கள் விலகுவதாக எண்ண வேண்டும்.

**"தியோ யோ நஹ ப்ரசோதயாத்"** என்று மனதில் சொல்லியவாறு சுவாசிக்காமல் இருக்க வேண்டும். இப்போது அன்னை காயத்ரியின் அருள் நம் மீது பொழிவதாக எண்ண வேண்டும். இது நம்முள் ஒரு ஆனந்தத்தை நிரப்பும்.

**5. நியாசம்:** உடலெங்கும் காயத்ரியின் சக்தியை நிலை நிறுத்துவதற்கு 'நியாசம்' என்று பெயர். இடது கையில் சிறிது நீர் வைத்துக் கொள்ளவும். வலது கை விரல்களை குவித்துக் கொண்டு, நீரில் தோய்த்து, கீழே குறிப்பிட்ட அங்கங்களைத் தொட வேண்டும். பக்கத்தில் கொடுத்த மந்திரங்களை உச்சரித்தவாறு முதலில் வலது பக்கம் அடுத்து இடது பக்கத்தை தொட வேண்டும்.

ஓம் வாங்க்மே ஆஸ்யே அஸ்து ... வாய் ஓரம்
ஓம் நசோர்மே பிராணோ அஸ்து நாசிகள்
ஓம் அக்ஷ்ணோர்மே சக்ஷுரஸ்து கண்கள்
ஓம் கர்ணயோர்மே ஷ்ரோத்தரமஸ்து காதுகள்

ஓம் பாஹுவோர்மே பலமஸ்து ... தோள்கள்

ஓம் ஊர்வோர்மே ஓஜோஅஸ்து .. தொடைகள்

இடது கையில் நீர் வைத்துக் கொண்டு, வலது கையால் இடது கையைத் தாங்கியவாறு, கீழே குறிப்பிட்ட மந்திரத்தை உச்சரித்தவாறு, தலை உடல் மீது தெளிக்க வேண்டும்.

"ஓம் அரிஷ்டானிமே அங்கானி
தனுஸ்தன்வாமே ஸஹுஸந்து"

**பூஜை :–** கை கூப்பி கீழே குறிப்பிட்ட மந்திரத்தால் அன்னை காயத்ரியை வந்து அமர பிரார்த்தனை செய்ய வேண்டும். படம் எதிரில் இருந்தால் படத்திலும், இல்லையென்றால் இதயத்திலும் வந்து அமர இந்த பிரார்த்தனை.

ஆயாது வரதே தேவி த்ர்யக்ஷரே பிரம்மவாதினி காயத்ரி சந்தஸாம் மாத: பிரம்மயோநே நமோஸ்துதே.

பிறகு பூ, தீபம், தூபத்தால் மற்றும் நைவேத்தியத்திற்கு ஏதாவது வைத்து அன்னையை வணங்கலாம். குறைந்தது ஒரு ஊதுவத்தி ஏற்றி காண்பிக்க வேண்டும்.

**ஜபம் :–** இதற்குப் பிறகு, முதலில் சொல்லியுள்ள காயத்ரி மந்திரத்தைக் குறைந்தது 108 தடவை (ஒரு மாலை) ஜபிக்க வேண்டும். இதற்கு மேல் அவரவர் சௌகரியப்படி அதிகம் செய்யலாம். கணக்கிற்கு ஜபமாலை அல்லது கடியாரத்தின் துணையுடன் செய்ய வேண்டும். ஒரு மாலைக்கு கிட்டத்தட்ட பத்து நிமிடம் தேவைப்படும். ஒவ்வொரு தடவை ஜபிக்கும் போதும் நம்முள் இருள் நீங்கி சத்தியத்தின் ஞானத்தின் ஒளி பெறுவது போல் பாவனையுடன் செய்ய வேண்டும்.

**பிரார்த்தனை :–** இருகை கூப்பி, அன்னை

காயத்ரியை தியானித்து நம் மனதிற்கு ஆத்ம சக்தியையும், நல்ல புத்தியையும் வாழ்க்கைக்கு நல்வழியையும் காண்பிக்க மனதார பிரார்த்தனை செய்ய வேண்டும்

உத்தமே ஷிகரே தேவி பூப்யாம் பர்வத மூர்த்தினி,
பிரஹ்மணேப்யோ ஹய்நுக்ஞாதம் கச்சதேவி யதாசுகம்.

தின சாதனை முற்றுப் பெற்றது.

## காயத்ரி உபாசனை மாதா ரூபத்தில் இருப்பதின் நோக்கம்?

காயத்ரி சக்தியை ஸ்திரீ ரூபத்தில் துதிப்பது ஏன்? பல தெய்வங்களை ஆண் ரூபத்தில் பூஜிக்கிறோம். காயத்ரி மந்திரத்தில் சவிதாவை தேவரூபமாக துதிக்கும் போது காயத்ரி எப்படி பெண்பால் ஆகலாம்?

இந்த சந்தேகங்கள் பிறப்பதன் காரணம்? மனிதன் எப்போதும் தன்னை உயர்த்தி பெண்ணை தாழ்த்தியே பேசி வந்திருக்கிறான். ஆண் பெண் சமம் என்ற உணர்வு அவனுக்கு இகழ்ச்சியாகப் படுகிறது. இதன் மூலகாரணம் வெகு காலமாகவே நிலவுகின்ற மூட நம்பிக்கை. இந்தச் சூழ்நிலையில் காயத்ரியின் ஸ்திரீ ரூபம் ஆச்சரியமாக இருக்கிறது. சிறிது சிந்தனை செய்வோமாக.

எவரிடம் நமக்கு பரஸ்பர உணர்வு ஏற்படுகிறதோ, அங்கு ஒரு உறவு பிறக்கிறது. அதன்பின் ஒரு அன்புப் பிணைப்பு இருக்கிறது. இதில் தருவதும் பெறுவதும் சகஜம். கிணற்றில் திரும்பும் எதிரொலியைப் போல் சிறிது அன்பால் பெருமளவு அன்பு திரும்பப் பெறுகிறோம்.

நீயே தாய், நீயே தந்தை..... என்று தொடங்கும் சமஸ்கிருத மந்திரத்தில் தாய்க்குத் தான் முதலிடம். ஏனெனில் உலகில் உத்தமமான உறவு தாயுறவு,

தன்னலமற்ற பூர்ண கருணையும் பிள்ளைப் பாசமும் நிறைந்த உறவு வேறொன்றுமில்லை. ஆகையால் அந்த பரம சக்தியையும் தாய் ரூபத்தில் துதிப்பதால் அதே அளவு பிள்ளைப்பாசமும் கருணை மழையும் பொழிகிறாள். இதனால் நம்பிக்கை உயர்ந்து, மனிதனின் பக்தி ஆழமாக முன்னேறுகிறது.

மகாசக்தியை பதினாறு வயது கன்னியாக துதிப்பதால், பெண்கள் மீது மோகத்தால் ஏற்படும் வக்கிர உணர்வுகள் மழுங்கி, மதிப்பு உயர்கிறது. இதனால் ஏற்படும் நன்மைகள் பல. ஆத்மீக சாதனையில் யோக சிந்தனையும், தேஜஸூம் கூடுகிறது. காயத்ரியின் உபாசனையில் மகாசக்திக்கு பெண் ஸ்தானம் கொடுத்து ஒரு மகத்துவ பூர்ணமான ஆத்மீக சாதனையின் அவசியத்தைப் பூர்த்தி செய்யும் நோக்கம் அடங்கி உள்ளது.

நாம் தெய்வத்தின் பால் அன்பு வைக்கிறோம். மற்றும் அவரது அளவில்லா அன்பின் பாத்திரமாக விரும்புகிறோம். மாதாவின் ரூபத்தில் தியானிப்பதால் இது மிகவும் அனுகூலமாக இருக்கிறது. சேயின் பால் தாய்க்கு இருக்கும் அன்பும் பிள்ளைப் பாசமும் நமக்கு கிடைக்க, மகாசக்தியை தாய் உருவத்தில் ஆராதிப்பது, ஆத்ம வித்தையின் மனோ விஞ்ஞான ரகசியங்களின் ஆதாரத்தில் உபயோகமாகவும், லாபகரமாகவுமாகக் கருதப்படுகிறது. பகவானை வேதமாதா காயத்ரியின் உருவத்தில் ஆராதித்து அளவில்லா அன்பும் ஆதரவும் பெறுகிறோம்.

பெண் சக்தி ஆணுக்கு எல்லா விதத்திலும் மரியாதைக்குரிய வணக்கத்திற்குரிய உறவு. மகள், சகோதரி, தாய் உருவத்தில் நட்பான உறவு. பெண்பால் எந்த வித நட்புணர்வும் இல்லாத மனிதனின்

வாழ்க்கை குரூரமும் அசுரத்தனமும் நிறைந்த வாழ்க்கை. பூமி மழையால் பசுஞ்சோலையாக மாறுவது போல், மனிதனும் பெண்ணின் அன்பால் மலர்ந்து உயர்கிறான். தன்னுள் இருக்கும் சக்தியின் மகத்துவத்தை உணர்கிறான். இதில் பெரும் குறையாக இருப்பது மோகம். மோகம் அமிர்தத்தையும் விஷமாக மாற்றி விடுகிறது. இதனால் ஏற்படும் அபாயங்களைத் தவிர்க்க, ஆண்-பெண்களைப் பிரித்து வைக்கும் சமூக சட்டங்கள் வகுக்கப்பட்டன. இந்த செயற்கைப் பிரிவினால் ஆண் பெண்ணின் புனிதமான உன்னதமான உறவினால் ஏற்படும் பலனை இழக்கிறோம்.

மனதில் பெண்ணின் பால் தோன்றும் வக்கிரமான மோக உணர்வுகளை காயத்ரி உபாசனை அழிக்கிறது. பகவானை ஜகன்மாதாவாக பரமபுண்ணிய பாவனையுடன் ஆராதித்து பெண்குலத்திற்கு மரியாதை தருவது அவசியமாகும். இந்த பழக்கத்தினால் எந்த அளவு வெற்றி அடைகிறோமோ அந்த அளவு நம்முள் தோன்றும் கெட்ட எண்ணங்கள் அழிகின்றன. தாய் பக்தி இருப்பவனிடம் மனோவிகாரங்கள் அதிக நேரம் வசிப்பதில்லை. ஆகையால்தான், ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸர், யோகி அரவிந்தர், சத்ரபதி சிவாஜி, மகாத்மா காந்தி, சுவாமி தயாநந்த சரஸ்வதி போன்ற பெரியோர்கள் மகா சக்தியை உபாசித்தார்கள். சக்தி உபாசனை பாரதத்தில் பிரதான தருமமாக இருந்து வருகிறது. நம்முடைய புண்ணிய பூமியை பாரத மாதாவாக வணங்குகிறோம். சிவனுக்கு முன்பு சக்தியை வழிபடுகிறோம். தந்தை, குருவை விட தாய்க்கு முதலிடம் தருகிறோம். இதே போல்

பகவானை ஜகன்மாதாவாக பூஜிப்பதில் நன்மைகள் பல.

பிரம்மம், நமது இந்திரியங்கள் மற்றும் புத்திக்கு அப்பாற்பட்ட நிர்விகார ரூபம். அவரிடம் நேரே அணுகுவதற்கு வேறு வழியில்லை. ஜபம் பல உருவத்தில் தியானம், பிரார்த்தனை, தவம், ஈஸ்வர சிந்தனை, சுலோகம், ஸ்துதி கீர்த்தனை எல்லாம் அத்யாத்ம சாதனைக்கு உதவும் உபகரணங்கள்.

சத்குண மாயா மற்றும் சித்தத்தின் மூலம் ஜீவன் ஈஸ்வரனுடன் கலக்க முடியும். இந்த ஆத்மாவைப் பரமாத்மாவுடன் சேர்த்து வைக்கும் சக்தி காயத்ரி. பல ரிஷிகள் தொன்று தொட்ட காலத்திலிருந்து காயத்ரியை உபாசித்து வந்திருக்கிறார்கள். ஏனென்றால் சக்தி இல்லாமல் முக்தி இல்லை. இதனால் பிதாவை விட மாதாவின் மகத்துவம் அதிகம். ஈஸ்வரனின் பேரன்புக்குப் பாத்திரமாக ஓர் உயர்ந்த வழி காயத்ரி உபாசனை.

சுந்தரம், மதுரம், கீர்த்தி, பொருள், நம்பிக்கை, கருணை, சந்தோஷம், நட்பு என்று பல உருவங்களில் இந்த மகாசக்தி உலகில் ஆனந்தத்தைத் தருகிறாள். நாமும் இந்த உலக மாதா காயத்ரியை தியானித்து, சம்சார பந்தத்தி லிருந்து விடுதலை பெற்று ஆனந்த நிலையை அடைவோமாக.



## திவ்ய சிந்தனையை வளர்க்கும் புனிதத் தலம் – சாந்தி குஞ்ச், ஹரித்வார்

* சாந்திகுஞ்ச் என்ற புனிதஸ்தலம், ஹரித்வார்-ரிஷிகேஷ் மார்க்கத்தில் சப்த சரோவர் என்ற இடத்தில் அமைந்துள்ளது. ஹரித்வார் ரயில் நிலையத்திலிருந்து 6 கி.மீ. தொலைவில் அமைந்த இந்த இடத்தில் விக்ரம் எனக் கூறப்படும்.. டெம்போ-டாக்சிகள் பஸ் ரயில் நிலையத்திலிருந்து அழைத்துச் செல்கின்றன.
* இமயத்தின் நிழலில். புனித கங்கையின் கரையில் அமைந்த இந்த ஸ்தலம் மகா பூஜ்ய யுகரிஷி பண்டிட் ஸ்ரீராம் சர்மா ஆச்சார்யரால், மகரிஷி விஸ்வாமித்திரரின் கடுந்தவத்தால் புனிதப்பட்ட பூமியின் மீது நிர்மாணிக்கப்பட்டது.
* யுகரிஷி மற்றும் அவரது மனைவி, மதிப்பிற்குரிய அன்னை பகவதி தேவி சர்மா இருவரின் தவத்தால் மேலும் புனிதப்பட்ட இடம் சாந்தி குஞ்ச்.
* ஒரு அழகிய மாதா காயத்ரியின் ஆலயமும் மற்றும் ஸப்தரிஷிகளின் சிறு கோயில்களும் இவ்விடத்திற்கு சிறப்பூட்டுகின்றன.
* 1926-ல் பரம் பூஜ்ய குருதேவரால் ஏற்றப்பட்ட அகண்ட தீபம் என்ற திவ்ய ஜோதி 90 வருடங்களாக, பக்தர்களின் இதயத்திலும், ஆத்மாவிலும் ஒளியேற்றி வருகின்றன. இதன் முன்னிலையில் 2400 கோடி மந்திரம் ஜபிக்கப்பட்டு இருக்கிறது.
* இங்கு 27 யாக குண்டங்களில் ஆயிரக்கணக்கான பக்தர்கள் தினமும் காயத்ரி யாகம் செய்து வருகிறார்கள். இதை ஜாதி, இன பேதமின்றி ஆண், பெண் இரு பாலரும் சேர்ந்து செய்து வருகிறார்கள்.
* உள்நாட்டவரும் மேல்நாட்டவருமாக லட்சக்கணக்கான பக்தர்கள் இந்து தத்துவ ஞானம், காயத்ரி ஜபம், உபாசனை, யாகம் முதலியவைகளைக் கற்று, ஆத்ம சக்தியை வளர்த்து வாழ்க்கையில் மேம்பட்டு வருகிறார்கள்.

* இங்கு 5 நாட்கள், 9 நாட்கள், ஒரு மாதம் என்று சாதனை வகுப்புகள் நடத்தப்படுகின்றன. இதனால் ஆத்மா, உள்ளம், உடல் மூன்றும் வலிமை பெறுகின்றன. இந்த வகுப்புகளுக்கு கட்டணம் ஏதுமில்லை. தங்க இடமும், இரு வேளை சாத்வீக சாப்பாடும் இலவசம். இவ்வகுப்புகள் ஹிந்தி மொழியில் நடைபெறுகின்றன.
* ஒன்பது நாட்கள் சாதனை வகுப்புகள். எல்லா மாதங்களிலும் 1-9, 11-19, 21-29 தேதிகளில் நடை பெறுகின்றன.
* ஒரு மாத வகுப்புகளில் ஆத்ம தத்துவங்களைத் தவிர, இசைப் பயற்சி மற்றும் சில குடிசைத் தொழில்கள் கற்றுக் கொடுக்கப் படுகின்றன.
* 5 நாட்கள் வகுப்புகளால் இருபதாயிரத்திற்கும் மேற்பட்ட மத்திய மற்றும் ராஜ்ய அரசாங்க ஊழியர்கள் பயன்பெற்று இருக்கிறார்கள்.
* வாழ்க்கையின் முக்கிய வைபவங்களான அன்னப்பிராசனம், வித்யாரம்பம், உபநயனம், திருமணம், வானபிரஸ்தம் மற்றும் சிரார்த்த-சர்ப்பணங்கள் இலவசமாகவே செய்து வைக்கப்படுகிறது. ஒவ்வொன்றின் அர்த்தமும் மகிமையும் விளக்கப்படுகிறது.
* முன்னூறுக்கும் மேற்பட்ட மூலிகை வகைகள் பயிர் செய்யப் படுகின்றன. இவை மீது ஆராய்ச்சியும் நடக்கிறது. மருந்து சூர்ணங்களும், கஷாயங்களும் மலிவு விலையில் விற்கப்படுகின்றன. இங்கு கிடைக்கும் மூலிகை - தேநீர் மூளையை பலப்படுத்தி ஞாபக சக்தியை அதிகரிக்கிறது.
* இங்கு பிரம்மவர்ச்சஸ் என்ற விஞ்ஞான ஆராய்ச்சிக் கூடம் விஞ்ஞான யுகத்தை நம்பும் எல்லோராலும் காண வேண்டிய இடம். இங்கு நவீன பௌதிக, ரசாயன, மருத்துவ-எலக்ட்ரானிக் சாதனங்களால் யோகம், ஜபம், தவம், யாகத்தினால் மனிதனின் உடல், உள்ளத்தில் ஏற்படும் மாறுதல்கள் மற்றும் யாகத்தினால் சூழ்நிலையில் ஏற்படும் மாறுதல்கள் ஆராயப்படுகின்றன.

* பரம் பூஜ்ய வேத பண்டிதரான குருஜி எல்லா வேத உபநிடதங்களுக்கு பாஷ்யமும் விளக்கமும் எழுதி இருக்கிறார், இதைத் தவிர 3000-க்கும் மேலான சிறு நூல்கள், வாழ்க்கைத் தத்துவம், வாழ வேண்டிய நெறி முறைகள் மற்றும் ஆத்ம தத்துவங்களை மிக அழகாக விளக்கி, இயற்றிக்கிருக்கிறார். இவற்றில் சில, மற்ற இந்திய மற்றும் ஆங்கில மொழிகளில் மொழி பெயர்க்கப் பட்டு இருக்கிறது.
* இந்தியில் மாத இதழ்களான அகண்ட ஜோதி, யுக நிர்மாண் யோஜனா மற்றும் யுக சக்தி காயத்ரி உலகில் 25 லட்சம் சந்தாதாரர்களால் படிக்கப்பட்டு வருகிறது.
* பரம பூஜ்ய குருஜியின் புரட்சி சாதனையில் தன்னை இழந்த 500-க்கும் மேற்பட்ட பக்தர்கள், இத்தொண்டுக்கு தங்கள் வாழ்க்கையை அர்ப்பணித்து, தான் செய்து வந்த தொழில்களை விட்டு இந்த ஆசிரமத்தில் தங்கள் குடும்பம் சகிதம் தங்கியிருக்கிறார்கள்.
* இங்கிருந்து வருடந்தோறும் நூற்றுக்கணக்கான தொண்டர் படைகள், கிராமம் கிராமமாகச் சென்று, காயத்ரி யாகத்தின் பயனையும் வழிமுறையும் விளக்கி, ஜாதி-மத-பால் பேதம் மற்றும் வரதட்சிணை, பெண் அவமதிப்பு போன்ற சமூக ஊழல்களை அகற்ற புரட்சி செய்து வருகிறார்கள்.
* இந்த ஸ்தாபனம் உலகெங்கிலும் 3000 காயத்ரி சக்தி பீடங்களை அமைத்திருக்கிறது. இவை அவ்வூரில் எவர் வீட்டிலும் காயத்ரி யாகம் செய்யத் துணை புரிகின்றன.
* ஒரு காலத்தில் தினம் பத்துகாசு மற்றும் கையளவு தானியம் என்று பரம பூஜ்ய குருஜியால் தொடங்கிய இச்சாதனை பல லட்சம் மக்கள் பங்கு பெற்று, இன்று ஒரு பெரிய ஆலமரமாக உலகெங்கிலும் கிளைவிட்டு தழைக்கின்றது.

****

# மிஷன் வெளியிடும் இதழ்கள்

1 **அகண்ட ஜோதி தமிழில்** (மாதம் இருமுறை)
(மதம் மற்றும் ஆன்மீக தத்துவ அறிவின் அறிவியல், தர்க்க பூர்வமான பிரமாணத்தின் உரைகல்லின் தேர்ந்த நற்சிந்தனைகள்)
வருடாந்திர சந்தா - ரூ. 96.00
**அகண்ட ஜோதி கன்னடத்தில்** (மாதம் இருமுறை)
வருடாந்திர சந்தா - 96.00
**அகண்ட ஜோதி மலையாளம்** (மாதம் இருமுறை)
வருடாந்திர சந்தா - 96.00
விலாஸம் : தென்மண்டலம், சாந்தி குஞ்ச், ஹரித்வார் - 249 411
(உத்தராகண்ட்)

2 **யுக சக்தி காயத்ரி தெலுங்கில்** (மாத இதழ்)
வருடாந்திர சந்தா - 150.00
விலாஸம் : காயத்ரி சேதனா கேந்திரா, அஸ்வினி ஹவுஸ் அருகில், பரத் நகர் பஸ் நிலையம், எச்.பி. ரோடு, மூஸாபெட், ஹைதராபாத் - 18 (தெலுங்கானா)
தொலைபேசி எண் : 040-23700722

3 **அகண்ட ஜோதி** (ஹிந்தி மாத இதழ்)
வருடாந்திர சந்தா - 150.00
ஆயுள் சந்தா - 1500.00
**அகண்ட ஜோதி** (ஆங்கில மாதம் இருமுறை)
வருடாந்திர சந்தா - 100.00
விலாஸம் : அகண்ட ஜோதி சம்ஸ்தான் கீயா மண்டி, மதுரா - 281003
(உத்தர்பிரதேசம்) தொலைபேசி எண் : 0565 - 2403920



TM 111